மாயாசனகப்படலத்திற் சீதைபால் இராவணன் இரந்து தனது ஆசையை வெளியிடுங்கவிதைகள் மிக்க அழகுடையன:

'தோற்பித்தீர்மதிக்குமேனிசுடுவித்தீர்தென்றல்தூற்ற
வேர்ப்பித்தீர்வயிரத்தோளைமெலிவித்தீர்வேனில்வேளை
ஆர்ப்பித்தீர்என்னையின்னலறிவித்தீரமரர்அச்சந்
தீர்ப்பித்தீரின்னமென்னசெய்வித்துத்தீர்திரம்மா.'

இதன்முன்வரும் இரண்டு கவிகளும் பின்வரும் இரண்டு கவிகளும் இதுபோலவே அழகுவாய்ந்துள்ளன. நல்லிசைப்புலவர்கவியினின் றுதிக்கும் அழகிய பொருட்செறிவைக் கீழ்வருஞ்செய்யுளால் வருணிக் கின்றார் கம்பர்.

'நல்லியற்கவிஞர்நாவிற்பொருள்குறித்தமர்ந்தநாமச்
சொல்லெனச்செய்யுட்கொண்டதொடையெனத்தொடையைநீக்கி
எல்லையில்செல்வந்தீராவிசையெனப்பழுதிலாத
பல்லலங்காரப்பண்பேகாகுத்தன்பகழிமாதோ!'

(8) சுத்தத் தமிழ்மொழியையே கூடியவரையில் தெரிந் தெடுத்துக்கொள்ளுதல்வேண்டும். பிறபாஷைமொழிகள் வேண்டப்படு மாயின் அவற்றைத் தமிழ்ப்பாஷையின்போக்கை அநுசரித்து ரூப மாற்றிக் கையாளுதல்வேண்டும். எல்லாமொழிகளும் தற்சமமாக வந்து கொள்ளுதலமையாது; வந்து பிரயோகிக்கப்படினும் கவிப்பான்மைக்குத் தக்க இசையொழுக்குப் பெறவேண்டும். இதனல் வடமொழிக் கலப் பில்லாமலே தற்காலம் தமிழ்க்காவியம் இயற்றல்வேண்டுமென்பது எனது கருத்தன்று. வேண்டியவிடத்துமாத்திரம் ஸம்ஸ்கிருதமொழிகளைப் பிர யோகித்துக்கொண்டாற் போதும்.

(9) இனி எதுகை மோனை முதலியன கவிக்கு ஆவசிகமான உறுப்புக்களோவென்று கவனிக்கவேண்டும். கவியியற்றுவோனது மனோ தர்மத்தை இவை தளைகின்றனவென்று யாரும் ஒப்புவர். அவற்றால் செய்யுட்குச் சந்தவின்பம் வராமற்போகவில்லை. ஆனல் ஒருவிஷயம் நாம் கவனித்துக்கொள்ளுதல்வேண்டும். பொருளின்பத்தைக் கெடுத் துச் சொல்லின்பம் கொள்ளுதற்கும் மலரையொழித்து நாரை மாலையாகக் கொள்ளுதற்கும் அதிக வித்தியாசமில்லை. ஆதலால் வேண்டுமாயின்

இச்சொல்லின்பத்தை உரிய இடத்தில் விட்டுவிடுவது தவறாகாது. எதுகையை ஒழித்துவிட்ட சில கவிகள் சிந்தாமணியில்வரக் காண் கின்றோம்.

‘அங்கைபோல்வயிறணிந்தவலஞ்சுழியமைகொப்பூழ்
கங்கையின்சுழியலைக்குங்கண்கொளா நுடங்கிடையை
யுண்டெனத்தமர்மதிப்பர்நோக்கினர்பிறரெல்லா
முண்டில்லையெனவையமல்லதொன் றுணர்வரிதே’

‘கங்கைமாக்கடற்பாய்வதேபோன்றுகாளைதன்கார்முக
மைந்தரார்த்தவர்வாயெலாநிறையவெஞ்சரங்கான்றபி
னெஞ்சம்போழ்ந்தழலம்புணாநீங்கினருயிர்நீண்முழைச்
சிங்கவேறுகள்கிடந்தபோற்சிறுவர்தேர்மிசைத்துஞ்சினர்’

இவ்வித வேறுபாடு பிற்காலக்கவிகளிற் காண்ப தருமை. எனினும் தமிழ்க்காவியவளர்ச்சிக்கு இவ்வழியையும் நாம் கையாடவேண்டிய தவசியமே.

காவியத்திற் றோன்றவேண்டும் ‘ரஸம்’ ‘வருணனை’ முதலியவற்றை இவ்விடம் விரித்துக்கூற நான் எண்ணவில்லை. எனினும், கம்பர் புதி தாகவியற்றிய உவமான அணிகள் மனதிற்கு ஆனந்தம் தராமலிரா. அவற்றுட் சிலவற்றைக் கூறுகின்றேன்.

‘ஓசைபெற்றுயர்பாற்கடலுற்றொரு
பூசைமுற்றவுநக்குபுக்கென’

‘காம்புகால்போகக்கண்ணகன்மால்வரைப்
பாம்புநான்றெனப்பாய்பசுந்தேறலே’

‘வையகமுழுவதும்வறிஞனோர்புமோர்
செய்யெனக்காத்தினிதரசுசெய்கின்றான்’

‘ஐயனுமிளவலுமனிநிலமகள்தன்

* * * *

கெய்குழலூறுமிழையெனநிலைதிரிவார்.’

‘சோர்பொழுதனிநகர்துறுகுவரெதிர்வார்
ஊர்வரவலர்பயிர்பொருவுவர்களியால்’

'மைவரைநெருப்பெரியவந்ததெனவந்தாள்'

'ஆலமர்வித்தினருங்குறளானான்'

'இரண்டுகன்றினுக்கிரங்குமோராவெனவிருந்தார்'

'அரக்கரென்கடலிடையாழ்கின்றாரொரு
மரக்கலம்பெற்றெனமறுக்கநீங்கினார்'

'தோட்டநுங்கிற்றொளையுறுமுக்கினைக்—காட்டெனா'

'சாகாமிருகத்தலைவரிற்றிலகமன்னான்
* * * * * *
ஆகாயமுற்றகதலிக்குவமையானான்.'

'கோல்பிடித்தெழுகுறுகுருடர்கூட்டம்போல்
வால்பிடித்தொழுகினகவியின்மாலையே.'

மேலும், சிரித்தபங்கயம்', 'பஞ்சின்றிப்பழுத்தபாதம்', 'வெங்களி விழிக்கொருவிழவு', 'கருநெருப்பினிடையே யெழுந்த வெண்ணெருப்பு', 'தாயரிற்பரிசேடியர்' 'நதியினுங் குளத்தும் பூவா நளினங்கள்', 'பள்ளத்துப்பாயு நன்னீரனையவர்', 'ஆம்பலொத்தமுதூறு செவ்வாய்ச்சியர்', 'தீங்கரும்பினுந் தித்திக்குமின்சொலார்', அரக்கரென்னும் கான்சுடமுளைத்த கற்பின்கனலி', 'அன்பெனும்விடமுண்டாரை யாற்றலா மருந்துமுண்டோ', 'நெய்த்தலைப்பால்கலந்தனையநேயம்', கமலத்தின் காடுபூத்த காளமாமேகம்' முதலிய அழகிய சொற்றொடர் ராமாயணத்திற் செறிந்துகிடக்கக் காணலாம்.

இதுவரையும் கூறப்பட்ட விதிகளெல்லாம் நமது செய்யுள் இலக்கியம் பரிஷ்காரமடைதற்பொருட்டேயாம். இவ்விதிகளை ஒட்டிக் காவியம் சமைப்பினும் ஒரு சிறந்தகாவியமாக அமைவது எளிதன்று. அதற்குக் கவிஞனிடம் பிறவியிலேயே விசேஷமான கவித்துவம் பொருந்தியிருத்தல்வேண்டும். நம்முடைய விதிகளெல்லாம் அந்த இயற்கையாற்றலை வளர்க்க உபகரணங்களாயிருக்குமேதவிரத் தாமாகவே பெரும்பயனைத் தரமாட்டா. எனினும் வரையறுத்தற்கு இடங்கொடுக்கக்கூடியவை இவ் விதிகளே. இதுபற்றியே இவைகளைமட்டும் தங்கள் முன்னிலையிற் கொண்டுவந்தேன். தமிழ்க்காவியத்தின் நோக்கம் தப்பாயிருக்குமிடத்திற் திருத்தம்பெறவேண்டும்; சுருங்கியிருக்குமிடத்தில் விசிக்கப்பட

வேண்டும்; கவின் குன்றினவிடத்திற் கவினுறச்செய்யவேண்டும். இதுவே, தமிழ்ப்புலவோர்களின் முக்கியகடமை. இந்நோக்கம் நிறைவேறவேண்டுமாயின், பிறபாஷைகளிலுள்ள காவியங்களைக் கற்றுணர்ந்து அவற்றின்கணுள்ள மேலான லக்ஷணங்களை யறிந்து அவையனைத்தையும் தமிழ்க்காவியங்களில் அமைக்க முயலவேண்டும். காலத்திற்கேற்ப இலக்கிய பரிஷ்காரமும் நடைபெறவேண்டியது மிகவும் ஆவசிகமே. இதை மறப்போமாயின் நமது இலக்கியம், அதிலும் காவிய இலக்கியம், வளர்ந்து விரிந்து பொலிவுபெறாதுபோகும்.

ஆகையால், தமிழர்களாகிய நாம் நமது இலக்கியவளர்ச்சியிற் றக்க கவனஞ்செலுத்தி முயலுவோமாக. முயற்சி திருவினையாக்கும் என்ற பெரிய உண்மை கடைப்பிடிக்கத்தக்கது.

K. N. சிவராஜபிள்ளை, B.A.,
திருவனந்தபுரம்.

ஸ்ரீ:

# அரிச்சந்திரசரிதையில் ஒருதிருத்தம்.

அரிச்சந்திர சரிதையின்கண்ணே கோசிகமுனிவன் அரிச்சந்திரனை வாய்மையிற் பிழைத்தல் காணவேண்டி, வஞ்சனைகாந்தமனத்தனய், அன்னவற்குப் பல்லாற்றானுந் தீங்கிழைபாநிற்ப, அரசன் அவற்றுளொன்றற்கும் உடையாத உள்ளத்துடன் பொய்யாநாவினையுடையனகிச் செந்நெறிக்கண்ணே யொழுகாநின்றான். அருந்தவமுனிவன் ஒன்றானுந் தனதுட்கோள் கடைபோகாமை கண்டு மேன்மேலும் பெருகிய ஊக்கத்துடன் முயறலை மேற்கொண்டு அவன்றன் நாடும் நகரும் கவர்ந்து வறியனாக்கி இறுதியாக அம்மன்னவன்றன்னை அவன் கற்புடைமனையாளை வாள்கொண்டு துணித்தற்குரிய கொலைவினைஞனாக்கினன். அரிச்சந்திரனதற்குச் சற்றும் பிற்காலியாது கொலைக்களத்துந் தன் மனையாளைக்கொல்வான் வாளோச்சி நிற்ப அக்கணத்தே முனிவன் அவனை விளித்து 'நீ புன்மையிற்றிறம்பிய வுரைபொன்று புகலின் அதற்குப் பரிசாக நினதிறந்தமகனை யுயிர்ப்பித்து உன்மனையாளுங் கொலையுண்ணுதகற்றி நீ யிழந்து வருந்து மரசியலுரிமை முதலியவற்றையு நினக்கே மீட்டுமளித்தருள்புரிவல் என்று கூறினன்.

அத்தருவாயில் அரசனு மவன்றேவியு மதற்கு மறுமாற்றமாகக் கூறிய பொருளடங்கிய சிலபாடல்கள் பன்முறையும் விரும்பிப் படித்தற் குரியனவாய் அரிச்சந்திர சரிதையிற் காணப்படுகின்றன. அவை:—

"செய்மையன்மையி லுயிர்க்குறு துணையெனச்சிறந்த
வாய்மையாலகந் தூய்மையா மற்றிலம்புயத்தைத்
தூய்மைசெய்வது நீறலாற்சொல்லின்வேறுளதோ
நோய்மைசெய்யினும்வாய்மையேநோன்பெமக்கறிதி"

"புலையனும்விரும்பா தவிப்புன்புலால்யாக்கை
நிலையெனுமருண்டுயிரினுநெடிது றச்சிறந்தே
தலைமைசேர் தருசத்தியம்பிறழ்வது தரியேம்
கலையுணர்ந்தநீயெமக்கிது கழறுவதழகோ"

"இம்மையம்மைவீடெனமறைபுலன்கொளவியம்பும்
மும்மையுந்தருமுறையுடைத்தெனுநிலைமுரணி
எம்மையாழ்வயிற்றடக்கிமீட்டுமிழ்கலாவெரிவாய்
வெம்மைகூர்நரகுய்க்கினுமெய்ம்மையைவிடேமால்"

"பதியிழந்தனம்பாலனையிழந்தனம்படைத்த
நிதியிழந்தனமினிநமக்குளதெனநினைக்கும்
கதியிழக்கினும்கட்டுரையிழக்கிலேமென்றார்
மதியிழந்து தன்வாயிழந்தருந்தவன்மறைந்தான்"

என்பன.

இவற்றுள் முதற்கட்குறித்த "செய்மையன்மையில்" என்றசெய் யுளே ஈண்டாராய்ச்சிக்குரியது. அச்செய்யுள் மேற்காட்டியவாறே சிறிதும் பிறழ்ச்சியின்றிப் பல அச்சுப்பிரதிகளிலும் சர்வகலாசங்கத்தார் பதிப் பித்த புத்தகங்களிலும் காணப்படுகிறது. அதன்கண் "அம்புயத்தைத் தூய்மைசெய்வது நீறலாற் சொல்லின்வேறுளதோ" என்ற தொடரை உள்ளவாறே கொண்டு உரைவகுப்பான் புகுந்த பெரியோரும், "அழகிய புயங்கட்குத் தூய்மையளிப்பது திருநீறணிதலேயாகும்; அகத்துறுப்பா கியமனம் தன் மாசுநீங்கித்தூய்மையுறுவது வாய்மையொன்றனேயாகும்; ஆதலா னிடையறுத்துன்பங்கட்குட்படுத்தியபோதிலும் யாம்வாய்மையே நோன்பாகக்கொண்டொழுகாநிற்பேம் என்பதை அறிவாயாக" என் றெழுதிச் சென்றனர். புயத்திலுஞ் சிறந்த நெற்றியிற் திருநீறணிதலே சிறந்ததாயிருப்ப அதனையொழித்துப் புயத்தைத் தூய்மைசெய்வதுநீறு எனக் கூறுதல் பொருந்தாமையா லது பாடமாகாது.

இதனை வேறுசிலர் "வாய்மையாலகந் தூய்மையா மற்றிலம் புயத்தைத்—தூய்மை செய்வது நீரலாற்சொல்லின் வேறுளதோ" எனப் பாடங்கொண்டு "சேற்றிலழுந்தி யசுத்தமடைந்திருக்கும் (அம்புயம்) தாமரையைக் கழுவுவது நீரேயன்றி வேறுண்டோ"எனப் பொருளுரைப்பர். அவ்வாறாயின் நீர் குமுதமுதலிய பிறவற்றையும் கழுவவற்றாகச்செய்தே "அம்புயத்தைத் தூய்மை செய்வது நீர்" என்று தாமரையையே எடுத்துக் கூறுவதில் யாதொருசிறப்புங் காணப்படாமையாலும், தாமரை நீர்படிந்தபாகமே பாசிபற்றி யசுத்தமாதலும், நீர்படியாதபாகமே பாசிபற்றாது சுத்தமாயிருப்பதும் பிரசித்தமாகையா லதுவும் சுத்தபாடமாகாது.

இனிச் சிறிது உற்றுநோக்குவார்க்கு அகந்தூய்மை பென்றதுணையானே அதன் மறுதலையாகிய புறந்தூய்மையு முடன்றோன்றுதலியல்பாதலால், "புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை—வாய்மையாற் காணப்படும்" என்னும் பொய்யாமொழியின் கருத்தினையே உட்கொண்டு ஆசிரியரிச்செய்யுளை இயற்றிப்போந்தாரென்பது புலனாகாதிராது.

அங்ஙனமாகவே, மேற்குறித்தசெய்யுள்,

"செம்மையன்மையிலுயிர்க்குறுதுணையெனச்சிறந்த
வாய்மையாலகந்தூய்மையாமற்றிலைபுறத்தைத்
தூய்மைசெய்வதுநீரலாற்சொல்லின்வேறுளதோ
நோய்மைசெய்யினும்வாய்மையேநோன்பெமக்கறிதி"

என்றிருக்கவேண்டுமென்பது நன்கு தெளியப்படும். இதற்குப் பொருள் வெளிப்படையாகலின் விளக்கவேண்டாதாயிற்று.

நிற்க; இதனிறுதியில் "நோன்பெமக்கறிதி" என்றிருப்பதை "நோன்பெனக்கருதி" என்று படித்துக் குளகமாக்கிக்கொண்டு அடுத்துவரும் "புலையனும்விரும்பாத" என்ற செய்யுளுடன் ஒருதொடராக்கிப் பொருளுரைப்பாருமுளர். அங்ஙன மிடர்ப்பாடுற்றுப் பொருளுரைப்பதி லொரு சிறப்பின்மையா லதுவும் பாடமன்றென்றும், நோன்பெமக்கறிதி யென்பதே சுத்தபாடமென்று மறியத்தக்கன.

*T. N.* அப்பனையங்கார்,

மதுரை.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்தார்

1921-ம்வருஷம் மார்ச்சுமீ 5-உ நடத்திய

# ஆங்கிலத்தமிழ்ப்பரீக்ஷைவினா.

---

## இண்டர்மீடியேட் வகுப்பு.

## 1. இலக்கியம்.

பரீக்ஷகர்—அ. கந்தசாமிப்பிள்ளை.

1921வருஷம் மார்ச்சுமீ 5உ சனிக்கிழமை பகல் 10-1

[அம்சம் 120.]

### செய்யுள்.

1. (a) பரணி-நூற்பெயர்க்காரணம், காலம், பாட்டுடைத்தலைவனது பெயர்கள்—எவை?

(b) இந்நூலாசிரியர் ஜைனர் என்பது சிலர்கொள்கை; அகச்சான்று (Internal evidence) காட்டி அதை மறுக்கக்கூடுமா? எப்படி?

(c) "தான்வேண்டிக் கோடலுமே தன்னுடைய தேவிபரிற் றலைமைத் தேவி, தேன்வேண்டு மொழிச்செல்வி திருமகட்குத் திருமகனைக்கொடுத்த பின்றை" "தங்களின் மகிழ்ந்து இருகுலத்தரசர் தாமும் தனித்தனி உவப்பது."

இங்குக் குறிப்பிட்டவை யார்யாரைக் குறிக்கும்?

(d) ஜயதரன்—ஐம்படைதரித்தது, பூணூல்தரித்தது, கல்விபயின்றது-வதேனும் ஒன்றைப்பற்றி ஆசிரியர் கூறுவதை எழுதுக.

2. (a) "திரிபுவனங்கள் வாழ்த்த" இருவிதமாகப் பொருள் கூறுக.

(b) i. விழித்தழற்புலியைமேலிருத்தி,இமயத்தினைத்திரித்த கோவில் வளைவுண்டு—இக்கதை யாது?

ii. அது "ஆடகக்கிரி (மேரு)யிற் புலிவைத்தவன்" என மற்ருேரிடத்துக் கூறுவதோடு முரணுதோ?

(c) சயத்தம்பம்நாட்டி, எழுகலிங்கம்—இக்கருத்து உங்கள் பாடத்துள் வேறெங்குக் காணப்படுகிறது? காட்டுக.

3. (a) பின் வருவனவற்றிற்கு உரையெழுதுக:—

i. முடுகிய பவன பதத்தி லுகக்கடை முடிவினில் உலக மெனச்சுடர் விட்டெழு, கடுகிய வடவன லத்தினை வைத்தது களமுறு துரக கணத்தின் முகத்திலே.

ii. சூரன்குலத்தோர்குபேரன்குலத்தோர் சுடர்ப்பாவகப், பேரன்குலத்தோர்கள்பு தலோரிருந்தார்கள்பேர் பெற்ற பேர், வீரங்கோலோவாகுசாரங்கோலோசெல்வமிச்சங் கொலோ, பூரம்புராசிப் புவிக்கென்று முதுவோர்கள் போதுவோர்களோ.

(b) i. முன் கீற்றிட்ட அம்புராசி, பொதுவோர் என்பவற்றின் காரணத்தை எழுதுக.

ii. கடவி, பூதரம், சராசனம், சோனகர், ஓரை, அரிதாரம் இவற்றுள் நான்குமொழிகளுக்கு அருத்தம் எழுதுக.

(c) i. பாண்டவரின் முற்பிறப்பு, சிசுபாலனுக்குக் கண்ண னிடம் பகைமை ஏற்பட்டகாரணம்—ஏதேனும் ஒரு கதையைப் பத்துப்பதினைந்துவரிக்குள் எழுதுக.

ii. சாற்றவா னன்று சுகன்றிருத்தாதை; பராசரமுனிவன் மதலையாம்படியே பகர்ந்தனை—இவை குறிப்பதை விளக்குக.

(d) 'கன்னட்டும்படிபொருது', 'வீரரைத்துறக்கம் ஏறவிட்டிடும் இரவி,' 'வஞ்சியந்தொடைமன்னன்', இவற்றாலறியப்படும் பழையவழக்கங்கள் எவை? ஐதிகம் எது?

(e) i. "பின்னிபகுஞ்சிப்பேதையர்" என்பது மரபுவழுவாகாதோ?

ii. வள்ளன்மை பூண்டான்கட் செல்வமும் உள்ளத்
துணர்வுடையா னோதிய நூலும்—புணர்வின்கட்
டக்க தறியும் தலைமகனும் இம்மூவர்
பொத்தின்றிக் காழ்த்த மரம்.

இது முடிபுவழுவாகாதோ? சமாதானம் கூறுக,

iii. நன்மகன் இழிந்தகுடியினும் பிறக்கக்கூடும் என்பதற்கு, "பெருங்கடலுட் பல்விலைய முத்தம் பிறக்கும்" என்ற உவமை பொருந்துமா? விளக்குக.

iv. ஊராண்மை என்னுஞ் செருக்கு—இத்தொடரில் எது என்னவாக உபசரிக்கப்பட்டிருக்கிறது?

வசனம்.

4. (a) i. ஆதியில் தமிழ்வசனநடை எவ்வாறு இருந்தது?

ii. ஆறுமுகநாவலர் நடையையும் வேதநாயகம்பிள்ளை நடையையும்பற்றிக் கூறப்பட்டிருப்பது எப்படி?

(b) நச்சினார்க்கினியர்—இல்லது புனைந்துரைத்தலைப்பற்றி என்ன கூறுகிறார்? என்பதையாவது

அல்லது

பரிமேலழகர் சொல்லின் நடையின் இயல்பைப்பற்றி என்ன கூறுகிறார்? என்பதையாவது எழுதுக.

(c) i. கூடசதுர்த்தம், மெய்ப்பாடு, தொடர்நிலைச்செய்யுள், பிசி,—இரண்டிற்கு விளக்கம் எழுதுக.

ii. 'மாணுக்கரைப் பரீட்சைப்பைங்கூழ்விளைக்கும் வரிகளாக்காமல், இறைக்கவூறும் மணற்கேணிகளாக்கவேண்டும்' இக்கருத்தை விளக்கமாக எழுதுக.

5. (a) கௌதமர் துறவியானமை எதன்பொருட்டு?

(b) அவர்கண்ட உண்மைகளில் முக்கியமான நான்கை விளக்குக.

6. (a) திருநாவுக்கரசுசுவாமிகள்—சூலைநீங்கப்பெற்றது, கன் மிதப்பில் அணைந்தது, ஐக்கியமானது—இத்தலங்கள் எவை? அவை எந்த ஜில்லாவைச்சேர்ந்தவை? அச் சமயத்தில் அவர்கூறியருளியவற்றில் ஏதேனும் ஒரு பாசுரம் எழுதுக.

(b) அவர்காலத்திருந்த நாயன்மார்களில் மூவர் பெயரை எழுதி எப்படி யறிகிறோம் என்பதையும எழுதுக.

7. (a) சாதுரியம் என்ற பாடம் தெரிவிக்கும் குறட்பாக்களில் ஒன்று கூறிச் சந்தர்ப்பமும காட்டுக.

(b) i. என்றுங்கிழியாதென்பாட்டு.

ii. மாத்தின்கிழாகாமாம்—இத்தொடர்கள் எதை வற் புறுத்த வருகின்றன.

---

## இண்டர்மீடியேட் வகுப்பு.

## 2. இலக்கணம்.

பரீக்ஷகர்:—சர்க்கரை இராமசாமிப்புலவர்.

1921-ஸு மார்ச்சுமீ 5உ சனிக்கிழமை பகல் 2—4.

[அம்சம் 90.]

I. 1. எழுத்திலக்கணம் எத்தனை வகைப்படும்? அவற்றினியல் களின் முறைவைப்புக்கு நியாயங்கூறுக.

2. இடுகுறிகாரணப்பெயர்பொதுச்சிறப்பின. இச்சூத்திரத்துக் குள்ள இரண்டுரையுங்கூறித் தனித்தனி யுதாரணமுந் தருக.

3. மொழிக்கிறுதியில் வாரா எழுத்துக்கள் எவை? ஈறுநிலைச் சூத்திரத்தில் உயிரெழுத்தை முற்கூறியதன்றிச் 'சாயுமுகர' மெனப் பிற்கூறுவானேன்?

4. பண்புப்பகுதி விகாரப்பட்டுப்புணரும் பதப்புணர்ச்சிகள் ஒவ் வொன்றுக்குந் தனித்தனி யுதாரணந் தருக.

5. மொழியிய லென்றது பதவியலெனப்பெயர்குறித்தது வென்?

II. 1. தெரிநிலைவினைப்பகுதிகள் விகுதிமுதலியவற்றோடு புணரும் போது பலவித வேறுபாடடையுமென்பதற் கறிகுறியாகஐந் துதாரணந் தருக.

2. இ, அம், அல், இவ்விகுதிகள் குறிக்கும் பொருள்களிலொவ் வொன்றுக்குந் தனித்தனி மூன்றுதாரணந் தருக.

3. எதிர்கால விடைநிலைச்சூத்திரத்தில் இவை சிலவில என்ற தற்குப் பொருள்கூறி அவற்றிற் குதாரணங்களு மெழுதுக.

4. "பெறுப்பெபருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய், வலிவரி னியல்பா' மென்றும் "ஆவியாமுன்வன்மைமிகா" வென்றும் பகுத்தோதுவானேன்?

5. "னலமுன றனவு" மென்ற சூத்திரத்தில் "ஆயுங்காலே" என்றதனா லறியப்படுவது என்ன?

III. 1. தன்வினையைப் பிறவினையாக்குமா றெங்ஙனம்? அவ்விரண் டுக்கும் பொதுவாகிய பகுதி யிரண்டு தருக.

2. எலுமிச்சம்பழம், வெவ்வேறு, நாழுழி, குடநாடு, குரக்கி னம், எருத்துமாடு, அனலுகண்டான், வேற்படை, இவை எவ்வெச்சூத்திரங்களில் எவ்வெவற்றிற் குதாரணமாகும்?

3. இருதிணைப்பொதுவினை, இருதிணைமுக்கூற்றொருமை, உளப் பாட்டுத்தன்மைப்பன்மை, இவை எவை?

4. முக்காலத்திற்கும்வரும் வினையெச்சம் எது? எப்படி?

5. தன் வினைமுதல்வினையைக்கொண்டு முடியும் வினையெச்சங்கள் யா? எவனுக்கும் வியங்கோளுக்குமுள்ள வேறுபாடி யாது?

IV. கீழ் வருவனவற்றிற் கொவ்வோ ருதாரணந் தருக.

1. செய்வினைக்கும் செயப்பாட்டுவினைக்கும் பொதுவினை
2. உடன்பாட்டுக்கும் எதிர்மறைக்கும் பொதுவினை
3. செயப்படுபொருள்கொண்ட பெயரெச்சம்
4. திரிபினுக்கப்பொருளகொண்ட ஆறனுருபு
5. எதுப்பொருள்கொண்ட ஐந்தனுருபு
6. பொருளாகுபெயர்க்கும் தானியாகுபெயர்க்கும் எதிரிடையாகிய ஆகுபெயர்கள்.

V. 1. பண்பு, உவமை, உம்மை, இவை எவ்வெவைபற்றி வரும்?

2. ஆகுபெயர்க்கும் அன்மொழித்தொகைக்குமுள்ள வேறுபாடென்ன?

3. பலபொருள் கலந்துவருகையில் எவ்வெவற்றால் ஒரு முடிவைப் பெறும்? உதாரணம் வேண்டும்.

4. எவ் வெவைபற்றிப் பால் திணைக ளிழுக்கினு மியல்பாகும்?

5. ஏ, ஓ, உம், என்னு மிடைச்சொற்கள் எவ்வெப்பொருள் பற்றி வரும்? மொழிமாற்று, கொண்டுகூட்டுப்பொருள் கோள்களுக்கு உதாரணம் தருக.

---

## இண்டர்மீடியேட் வகுப்பு.

## 3. வியாசம்.

பரீக்ஷகர்:—K. C. வீரராகவையர் M.A., L.T., F.C.S.,

1921ளூ மார்ச்சுமீ 5௳ சனிக்கிழமை பிற்பகல் 4½-5½

[அம்சம் 30.]

பின்குறித்த விஷயங்களில் யாதேனுமொன்றைப்பற்றி ஒருவியாசம் எழுதுக.

1. நீர் அறிந்த ஒரு தமிழ்க்கவியின் திறமையும் ஜீவியசரிதையும்;
2. கூட்டுறவுநாணயசசங்கங்களும் ஜனங்களின் செட்டும்;
3. மகாமகவரலாறு;
4. "ஒத்துழையாமை இயக்க"த்தின் நன்மைகளும் தீமைகளும்.

---

# திருக்கச்சிநெறிக்காரைக்காட்டுச்

## சோழசிலாசாசனங்கள்.

(கசூ௪-ம் பக்கத்தொடர்ச்சி.)

——:o:——

*கோப்பரகேசரிவன்மராகிய ஸ்ரீராஜேந்திரசோழதேவற்குயாண்டு ௬° ஆவது.*

எயிற்கோட்டத்து, நகரம் கச்சிப்பேட்டு திருநெறிக்காரைக்காடுடைய மகாதேவர்க்கு:—

பிள்ளையார் அருமொழிநங்கையார் அதிகாரிச்சி எயில்கோட்டத்து எயில்நாட்டு சத்திமங்கலத்து "பாலிகிழான் வேங்கடவன்" "நக்கபிராட்டி" வைத்த திருநொந்தாவிளக்கு ஒன்றுக்கும்—

9. ஊற்றுக்காட்டுக்கோட்டத்து தமனூர்நாட்டு, திருக்காரைக்காட்டுப்புறம், அவ்வள்ளூர்மன்றாடி "தண்டினப்பாடி" கொண்ட ஆடு நாற்பத்தேழரையால் திருவேகம்பனூல் (ஓர் முகத்தலளவை) நிச்சற்படி அட்ட கடவநெய் ஆழாக்கும்,

10. மேற்படியூர் மன்றாடி "காளழுக்கியன் ஒற்றி" கொண்ட ஆடு இருபத்திமூன்றேமுக்காலினல் அட்டக்கடவ நெய் ஷ நாழியால் நிச்சற்படி (நாள்தோறும்) இரு செவிடரையும் ($2\frac{1}{2}$-செவிடு)

11. மேற்படியூர் மன்றாடி "பெருமாடன் மோடன்"கொண்ட ஆடு இருபத்தி மூன்றேமுக்காலால் அட்ட நிச்சற்படி அட்டக்கடவநெய் இரு செவிடரையும் ($2\frac{1}{2}$-செவிடுநெய்).

ஆக ஆடு தொண்ணூற்றைஞ்சினல் நிச்சற்படி அட்டக்கடவநெய் உழக்கும் (உழக்கு=கால் ($\frac{1}{4}$)-படி) இந் நெய் உழக்கும் இக்கோயில் தானபதிகள் பக்கல் திங்கள்தோறும் (மாதந்தோறும்) அற அட்டி சந்திராதித்தவரை செலுத்தக்கடவேனாகவும், இப்பரிசு சிலாலேகைசெய்து கொடுத்தோம் இவ்வனைவோம், இவர்கள்சொல்ல எழுதினேன்..............

---

### அடிப்படையின் தொடர்ச்சி.

*சுவஸ்திஸ்ரீ:* திருமன்னிவளர இருநிலமடந்தையும், பொற்சயப்பாவையும் சீர்தனிச் செல்வியும், தன்பெருந் தேவியாக்கி இன்புற, நெடுதியலூழியுள் இடைதுறை நாடுந், துடர்வனவேலிப்படர்வனவாசியும் (Vanavasi) சுள்ளிசூழ்மதிற் கொள்ளிப்பாகையும் (Kollippakai) நண்ணற்கருமரன் மண்ணைக்கடக்கமும், பொருகடல் ஈழத்தரையர்தம் முடியும் (The crown of king of ceylon) ஆங்கவர் தேவியர் ஓங்கெழில் முடியும் முன்னவன்பக்கல் தென்னவன் வைத்த, சுந்தரமுடியும் இந்திரனாரமும்,தெண்டிரையீழமண்டலமுழுவதும், எறிபடைக்கொள்ள

(கோளன் என்றும் பாடம் வழங்கும்). முறையிற்சூடும், குலதனமாகிய பலர் புகழ்முடியும், செங்கதிர் மாலையும் சங்கதிர்வேலைத், தொல்பெருங் காவற் பல்பழந்தீவும், செருவிற்சினவில் இருபத்தொருகால், அரசுகளைக் கட்ட பரசுராமன், மேவருஞ்சாந்திய மத்திவரண் கருதி, யிருத்திய செம் பொற்றிருத்தகுமுடியும், மாப்பெருந்தண்டாற் கொண்ட கோப்பர கேசரி வன்மரான ஸ்ரீ ராஜேந்திரசோளதேவற்குயாண்டு ௧௧-வது

அரையன் இராஜராஜன் (இவர் ராஜேந்திரசோளதேவரின் தகப்பனு ராக இருத்தல் வேண்டும். இம் மண்ணுலகாண்டு பெரும்பேறுபெற்ற இவர் தம் ஜீவியகாலத்திலேயே தம் மகற்குப் பட்டம்சூட்டி அவனது 11-வது ஆண்டில் ஸ்தலயாத்திரையாக வெளிவந்ததாகத் தெரிகிறது.)

எயிற்கோட்டத்து நகரம் காஞ்சிபுரத்து, திருக்காரைக்காடுடையார் கோவில் வேதாரும் (வேதியரும்) வேதர் சூழவல்லாரொரு சிவயோகி யார்க்கு (வேதம்வல்ல வேதியர்கள் புடைசூழ்ந்து செல்லும் ஒருசிவயோகி- சந்நியாசிக்கு)..................வேண்டும் பலவதார்வச நெல்லு அறுபதின் கலமும் கல், பதர், செத்தல் (சாவிநெல்) முளை, மடி, நீக்கி உலகும், பாற் கூலியும் நாங்களேபட்டு திருக்காரைக்காடுடையார் திருமுற்றத்தே கொடு வந்து இக்கோயில் மடமுடையார்வசம் சந்திராதித்தவரை முட்டாமே யறப்பதாகவும், இந்நெல் தண்டவந்தார்க்கு மெய்கண்டு சோறுகொடுப்ப தாகவும் இத் தன்மத்திற்கு விரோதநின்றோம் கங்கையிடை குமரியிடை செய்தார் செய்தபாவம்பட்டு இந்நெல்லு சந்திராதித்தவரை முட்டாமே அறப்பதாக சிலாலேகைசெய்து கொடுத்தோம்..................

நிசத அரிசி பத்தெட்டு குத்தலரிசி இருநாழியும், நெய் யாழாக் கும், கும்மாயத்திற்கு பயறுழக்கும், இட்டு உண்ணவும், முறங்கறிகிட வுஞ் சற்கரை அரைபலமும் ($\frac{1}{2}$ பலம்), வாழைப்பழமிரண்டும், புழுக்கு கறி ஒன்று, மிளகு பொடி கறி ஒன்றும், தயிர்க்கிருநாழியும், (௨ நாழி தயிர்), வெற்றிலை நாலும் வெறுங்காய் இரண்டும், இப்படி இத்தனையும், இந்நெல்லு பதக்குங்கொண்டு (பத்தெட்டு=பதக்கென்றிருத்தல்வேண் டும்) குத்தி குறைவுள்ளடங்க சந்திராதித்தவரையிலூட்டுவதற்கு நிவந் தஞ்செய்தது.

அறம் அறிவற்க ! அறமல்லது துணையில்லை!!

(ஸ்ரீராஜேந்திரசோழதேவன் தனது 11வது ராஜ்யவருஷத்தில்)

செயங்கொண்டசோழமண்டலத்து, ஊற்றுக்காட்டுக்கோட்டத்து தமனூர்நாட்டு திருக்காரைக்காட்டுத்தேவதானம் அவ்வளூர் ஊரோம் கையெழுத்து.

சோழமண்டலத்து தென்கரை நித்தவிநோதவளநாட்டு, ஆவூர் கூற்றத்து, செம்பங்குடை செம்பங்குடையான் அமுதந்தேவனுகிய இராஜவிச்சாதரவி.... .... .... .... .... .... ....

காஞ்சிபுரத்து திருநெறிக்காரைக்காட்டு மடமுடைய திருக்காரைக் காட்டுப்பிச்சன் "கையாலிதேவர்" ஸ்ரீ பண்டாரத்துவைத்த பொன் "ஆதிதாஸசண்டேச்வரதேவர்" பக்கல் நாங்கள்கொண்ட பொன் கழஞ்சி னுக்கு (1 கழஞ்சு பொன்) ஆண்டுவரை அருமொழித்தேவன் மாக்கா லால் கலனே துணி அளந்து தரவுகொள்வோமாகவும்.

இம்முதற்பொன்கொள்கவென்றுசொல்லப்பெறுதோமாகவும், இதற் றிறம்பில் தன்மாஸனமுதலாகத் தான் வேண்டுகோவுக்கு நிசதம் கழஞ்சு பொன் தரவும், இட்டதண்டம் மன்றுபாடு சென்று மறுக்கவும், புள்ளிகுத்திவைக்கவும், பெறுதோமாகவும். இப்பாவப்பட்டும், இந்நெல் சந்திராதித்தவரை முட்டாமே அறப்பதமாகவும் சிலாலேகை செய்து கொடுத்தோம்.

ஊற்றுக்காட்டுக் கோட்டத்து தமனூர்நாட்டு அவ்வள்ளூரோம் சொல்ல எழுதினேன். குன்றபாக்கிழான், குறைவன்முகடுபானேன், இவை என்னெழுத்து.

இந்நெல்லுக்கு நிவந்தம் வைச்ச அரையன் இராஜராஜன் என்றுக் கலம் உண்ணும் சிவயோகிக்கு உண்ண இட்ட வெண்கலத்தளிகைக னல் கம்பனல் நிறை சஎ (47 பலம்) டலமும், தண்ணீர் ஆட்டப் "பிங்காளம்' தளிகையினல் கம்பனல் நிறை உ0 (20) பலமும், மாட்டு வம்கனல், கம்பனல் நிறை சு(6)பலமும் தரசாட அட்டணைக்கல்கனல் கம்பனல் நிறை சு0 (60) பலமும் பூசம் தளிகைகனல் கம்பனல்நிறை உசு (26) பலமும் இவை .... .... .... .... .... ....

(இதில் கண்ட பதங்கள் பழமையாயிருத்தலினுற் பொருள்விளங்க வில்லை.)

காஞ்சிபுரம் அ. நடேசசெட்டி,
85. செட்டித்தெரு,
சின்னக்காஞ்சிபுரம்.

ஸ்ரீ:

# சங்கச்செய்யுளில் ஏகாரம் அடுத்த ஒளீற்றுவிளி.



சென்ற சிலமாதங்களாக '13-ம் புறப்பாட்டும் அதன் உரையும்' என்ற நீண்ட ஆராய்ச்சியும், அதனையடுத்து அதன் மறுதலைமுடிவும் வெளிவந்தமை பலரு மறிந்ததே. அவ்வாராய்ச்சி சென்றவருஷத்து மார்கழி மாதப்பகுதியோடு முடிவெய்தியது.

அதன் ஈற்றில் அவ்வாராய்ச்சியாளர் தாம் ஆராய்ந்துகண்ட முடிவு களாகச் சிலவற்றைக் குறித்தனர். அவற்றிலொன்று, "சங்கநூல்வழக் கின்கண்ணே ஏகாரம் அடுத்த ஒளீற்றுச்சொற்கள் யாண்டும் படர்க் கையாகவே வந்துள்ளன" என்பது. பின்னர் மாசிமாதச் செந்தமிழ்ப்பகுதி யில் அதன் மறுதலைமுடிவும் வெளிப்பட்டது. அதில் "இது இக் காலத் தகப்படாதனவும் இறந்தொழிந்தனவுமான சங்கநூல்களெல்லா வற்றையும் ஒரு சிறிதும் குறைவின்றி யாராய்ந்தறிந்துகொண்ட பின் பன்றி நம்பற்பாலதன்று" என்று குறிக்கப்பட்டிருக்கிறது. முதற்கட் கூறப்பட்ட முடிவிற்கு இதுவே எற்ற சமாதானமாக அமையக்கூடிய தெனினும் சங்கச்செய்யுள்களில் ஏகாரம் அடுத்த ஒளீற்றுவிளியே இல் லாமற்போகவுமில்லை.

தொல்காப்பியம், செய்யுளியல், "எண்ணிடையொழிதல் ஏதமின் றே—சின்னமல்லாக் காலையான" (146) என்னும் சூத்திரவுரையில் நச்சி னார்க்கினியரும் பேராசிரியரும் மேற்கோளாக எடுத்தாண்டுள்ள பெருந் தேவபாணிச் செய்யுளொன் றுள்ளது. அதனுள் "அளப்பரிய நான் மறையா னுணர்ந்துதற் கரியோனே" என ஏகாரமடுத்த ஒளீற்றுவிளிப் பொருண்மையில் வழங்கப்பட்டிருக்கிறது. ஆகலி னதனைக் கீழே தருகின்றேன்.

"மணிவிளங்குதிருமார்பின் மாமலராள் வீற்றிருப்பப்
பனிதயங்குநேமியும் பானிறத்தசுரிசங்கும்
இருசுடர்போலிருகாத்திலேந்தியமர்மாயோனும்
பங்கயத்தினுறைவோனும்பாகத்தோர்பசுங்கொடிசேர்

செந்தழற்கண்ணுநலோனுந்தெருங்கானீயென்பார்க்
கவரவர்தமுள்ளத்துளவ்வுருவாயல்லாத
பிறவுருவுநீயென்னிற்பிறவுருவுநீயேயா
யளப்பரியநான்மறையானுணர்த்துதற்கரியோனே!

எவ்வுயிர்க்குமுரிரேயாயியக்குதனின்றொழிலாகி
யவ்வுயிர்க்கணடங்கியேயருளாதுநிற்றலினல்
வெவ்வினைசெய்தவையுழந்துவெம்பிறவிக்கடலழுந்த
வவ்வினையையகற்றுதுநிற்பதுநின்னருளன்றே;

பல்லுயிரும்படைப்பதுநின்பண்பன்றேபகலினல்
வல்வினையிலகப்பட்டுவருந்தங்கூருயிர்தம்மை
நல்வினையேபயில்வித்துநடுக்கஞ்செய்பகைநீக்கி
யல்லல்வாயழுந்தாமலகற்றுவதுமருளன்றே;

அறிப்பருநின்றொழிலன்றேயளைந்தாலுமுயிரெல்லா
மொழிதகவுற்றுணர்வுகளையொருவாமலுடனிறுத்திப்
பழிப்பிலாத்திப்பலகாலுமிப்பிரிசேபயிற்றுதலின்
அறிப்பருமிதினிலையானகைதுமயருளன்றே;

பேர்வினைற்றிரிதிறழிழியொடுங்கிய
தார்விளங்கணர்தம்வினையாயினை;

வீடாயினீங்கிவிழுத்தவஞ்செய்பு
முனிவர்தமக்குமுத்தியாயினை;

இல்லெனவிகழ்ந்தோர்க்கில்லையுமாயினை
உண்டெனவுணர்ந்தோர்க்குண்மையுமாயினை
அருவுருவென்போர்க்கவையுமாயினை
பொருவறவிளங்கிப்போதமாயினை;

பானிறவண்ணநீபனிமதிக்கடவுணீ
நீனிறவுருவுநீநிறமிகுகனலுநீ
யருவுருவொருவநீயொளிமிற்கடவுணீ
பெருதிருவுருவுநீபெட்பனபிறவுநீ;

மண்ணுநீவிண்ணுநீமலையுநீகடலுநீ
எண்ணுநீயெழுத்துநீயிரவுநீபகலுநீ
பண்ணுநீபாவுநீபாட்டுநீதொடருநீ
அண்ணனீயமலனீயருளுநீபொருளுநீ;

ஆங்க,

இணையையாகியவிறைவநின்னடியிணை
சென்னியின்வாங்கிப்பன்னாள்பரவுதும்
மலர்தலையுலகின்மன்னுயிர்க்கெல்லாம்
நிலவியபிறவியைநீத்தல்வேண்டி
முற்றியபற்றொடுசெற்றநீக்கி
முனிமையாக்கியமுவா முத்தியை
மயலறவளித்தநின்மலரடி
யரியவன்றாயுரிதினிற்பெறவே."

இஃது எட்டடித் தாவுந் தாவின்பாகம்பற்றிய நான்கடித்தாழிசை மூன்றும் ஈரடியிரண்டும் ஓரடிநான்கும் இருசீரெட்டும் ஒருசீர் பதினாறு மாகிய நால்வகையெண்ணுந் தனிச்சொல்லும் எட்டடிச்சுரிதகமும் பெற்ற தலையளவுவண்ணகப் பெருந்தேவபாணி.

இச்செய்யுள் வாக்கின்போக்காலும் பிறகுறிப்புக்களாலும் சங்கத் தான்றோர்செய்யுட்களு ளொன்றென்றே கருதப்படுகின்றது. இன்ன நூலைச்சார்ந்ததென்றறியமுடியாதிருத்தலே இதன் பழமையை நன்கு விளக்கும். இச்செய்யுள் இறந்தொழிந்த எத்துணையோ நூல்களிலொன் றற்குரியதாகும்; ஆகவே "சங்கநூல்வழக்கின்கண்ணே ஏகாரம் அடுத்த ஒளீற்றுவிளி யாண்டும் படர்க்கையாகவே வந்துள்ளது" என்னும் முடிபு நிலையாதாயிற்று.

T. N. அப்பனையங்கார்,
மதுரை.

---

# சிறைவிடந்தாதி.

[குறிப்பு:-சிறைவிடந்தாதியென்னும் இந்நூல் என்னிடமுள்ளதோ ரேட்டுப்பிரதியிலுள்ளது. இது சொற்சுவை, பொருட்சுவை, பத்திச் சுவைகளுடன் நூறுவிருத்தப்பாக்களால் வெவ்வேறுசந்தங்களில் அந்தாதித்தொடராகத் திருச்செந்தூர் முருகப்பெருமான்மீது பாடப்பட்டதொரு பிரபந்தம். பல்லாண்டுகட்குமுன் வெளிவந்துள்ள இது, இப்பொழுது யாங்கனும் கிடையாமையாலும் ஒரே பிரதியே யுள்ளமையாலும் ஏட்டுப்பிரதி சிதிலமடைந்துபோகுமுன் பாதுகாக்கப்படுத லவசியமாகலாலும், தனியேபுத்தகமாகப் பதிப்பித்தற்கு ஒப்புநோக்கிச் செப்பனிடவேறுபிரதிகள் கிட்டாமையால் ஏட்டிலுள்ளவாறே செந்தமிழ்ப்பத்திரிகைமூலம் வெளியிடப்படுகிறது. பிரதிகள்வைத்திருக்குந் தமிழபிமானிகள் சங்கத்திற்குக் கொடுத்துதவுவாராயின், பரிசோதித்துப் பின் புத்தகரூபமாக வெளியிடற்குச் சாதகமாகும். இந்நூலாசிரியர்வரலாறு முதலியன தெரியவில்லை. செய்யுண் முடிவிற் பாண்டியன்சிறையிலகப்பட்டுக் கோனேரிப்புலவன்பாடிய சிறைவிடந்தாதியென் றெழுதியுள்ளது.]

## நூல்.

பூவருபொலன்கழற்குமரன்பொன்னடிச்
சேவடிப்பணிமலர்ச்சிந்தைசேர்ப்பினுந்
நாவருங்கொடிமதிற்செந்திற்சாரினுங்
காவருங்கடவுளாரசுகைக்கொள்வார். (க)

வார்கடற்புவியினிற்பிறந்துமாண்டுபோய்ப்
போர்கெழுமறலிகைப்புகுவர்பூங்கழற்
சீர்கெழுமமுதாற்சிந்தைசெய்கிலார்
பார்கெழுபிறவியுட்படமாக்களே. (உ)

கன்னுறுநறுமலரிறைத்துக்கைதொழு
தன்னுறுமுருகன்பொருங்குனேக்கிலீர்
வன்னுறுகூற்படைமறலிதென்புலந்
தன்னுறுமொருவழிபெச்சன்சாற்றுவிர். (௩)

சாற்றுவீர்சரவணன்றண்ணந்தாமரை
போற்றுவீரிம்மையிற்புரிந்ததீவினை
மாற்றுவீர்செந்தில்மான்மருகனென்றுரு
வேற்றுவீர்பிறப்பிறப்பிரண்டுந்தீரவே. (௪)

வேதநூலுபநிடம்விரிக்கொணாப்பொரு
ளோதிவாய்விடுத்தெடுத்துரைக்கொணாப்பொரு
ளாதிநாயகற்கறிவறிவிக்கும்பொருள்
சோதியாறெழுத்தொடுதோன்றுமோர்பொருள். (௫)

பொருளெனப்பலபெருஞ்சமயம்போக்குறு
மருளுறுமாக்களுக்களித்தவான்பொருட்
கருள்வது நின்கழற்கமலமல்லவோ
தெருண்மறைமுறைதொழுசெந்திலெந்தையே. (௬)

எந்தையேமுழுமறையிசைக்கும்பல்லுயிர்த்
தந்தையேயறுமுகதநமமேமுதன்
முந்தைநான்முகன்றொழு முதல்வயானுடைச்
சிந்தையேதுயர்துடைத்தருளிச்செய்வையே. (௭)

செய்வதொன்றறிகிலென்செழுமென்போதுதாட்
பெய்வதொன்றறிகிலேன்பேதையேன்சுடர்
வைதிகழ்வேற்படைமுருகவன்றனை
கொய்தெனக்கிரங்கியாட்கொள்ளவேண்டுமால். (௮)

வேண்டியவடியவர்க்குதவிவெவ்வினை
மாண்டறத்துடைத்தருள்வழங்கிக்காக்குமாற்
காண்டகுமறுமுகக்கடவுள்செம்மணித்
தூண்டொகுபன்னிருதோளின்றிண்மையே. (௯)

திண்மைசாலமரரைச்சிறைவிடுத்தநின்
றண்மைசால்கருணையிற்றமியர்க்கேதெனு
முண்மைசார்ந்துதவுதியொருவனேபெரு
வண்மைசார்குறக்கொடிவள்ளிகேள்வனே. (௰)

## வேறு.

வள்ளிக்காருயிர்க்கொழுநனைக்கொழுங்கதிர்வடிவேலைப்
புள்ளிச்சேவலங்கொடியினைத்திளைத்தாறும்புகழாதார்
கொள்ளிச்சூர்விழிக்கூற்றுவன்றெவ்புலக்கொடுமைபெழ்வா
யள்ளற்றீநிரயப்பெரும்படுகுழியகழ்வாரே. (௧௧)

அகழுமார்கலிப்புணரிமண்ணளப்பிறுமருப்பாவி
யிகழ்பெரும்பிறப்பெண்ணிலவெண்ணிலவினைபோனே
மகரவாரிதிமாழுதறுணிபடநெடுவானோர்
புகழவேறெடுத்தனைபவர்க்கருண் மழைபொழிந்தானே. (௧௨)

பொழிந்தநின்பெருங்கருணைபெற்றுணர்கிலேன்புலைவாழ்க்கை
யொழிந்துநின்றிருத்தொண்டுபெற்றுய்கிலனுய்வேனோ
சுழிந்துமுப்புரங்கடந்தவற்கருமறைத்தொடர்காட்டி
மொழிந்தசெந்திலெம்பரமனையறுமுகமுருகோனே. (௧௩)

முருகசுந்தரகுருபரவறுமுகமுதல்வாமான்
மருகவென்பவர்க்கிம்மையுமறுமையும்வழுவாதாற்
றிருகுவெள்ளெயிற்றழல்விழிச்சூருயிர்சினவாபாற்
பருகும்வேற்படைதுடைப்பதுபழவினைப்பகையன்றே. (௧௪)

பகையுப்பாவமும்பழவினைத்தொடர்ச்சியும்பகைபான
மிகையும்வெந்திறலந்தகன்சீற்றமும்வெருவேனுன்
முகைமென்கண்ணியன்குருபரனறுமுகமுருகேசன்
சிகையஞ்சேவலங்கொடியனைச்சிந்தியேன்சிறியேனே. (௧௫)

சிறுமையெய்தினுந்தீவினையெய்தினுஞ்சிறியேன்
வறுமையெய்தினும்வாழினுமறப்பெருமைமலர்த்தா
ளுறுபெரும்பொருளுணர்ந்துமோங்காரவுள்ளொளியே
யறுமுகப்பெருங்கடவுளேயமரர்நாயகனே. (௧௬)

அமரர்வேந்தனுமகப்புரைபகப்பொருட்டவருங்
கமலயோனியுமின்னமுங்கதிகொடுத்துயர்ந்தார்
விமலவேற்படைவிடுத்துவெஞ்சூர்கிளைதடிந்த
குமரபன்னிருதடம்புயக்குன்றுடைக்களிறே. (௧௭)

களிறுமூர்தியுமொருதனிக்கவிகையுங்கணக்கிற்
குளிறுபல்லியப்பெருக்கமுந்துணிப்பதுகுணிப்போ
வெளிறும்வெள்ளெயிற்றந்தகற்கந்தியம்வெருவா
தொளிறுவேற்படைமுருகனென்றுணர்ந்துரைத்திருமே. (கஅ)

இருக்குமெய்ப்பெருஞ்சமயநூல்யாவையுமெடுத்துப்
பெருக்குமப்பொருணின்றிருப்பெயராற்பெறுமே
திருக்கைவேற்படைச்செல்வனேசெந்திலெம்பெருமான்
மருப்படுந்துணர்க்கடம்பனேவள்ளிநாயகனே. (ககூ)

வள்ளைவார்குழைமரகதப்பசுங்கொடிபயந்த
பிள்ளையேபெருநான்மறைப்பெறலருஞ்சிறப்பே
கள்ளைவார்பொழிற்கற்பகமுழுவனங்கடவுள்
வெள்ளைவாரணக்களித்தநின்வேற்படைக்கபயம். (உ0)

வேறு

படைவேல்கொண்டனையதடங்கருநெடுங்கண்மடமகளிர்பணைமென்கொங்கைப்
புடைபோயவுணர்வுடையேற்குனதுதிருத்தாளலதுபுகலுமுண்டே
கடைபோயமுறுக்கெயிற்றுக்கருந்தலைச்சூருயிர்குடித்துக்கனன்றவாகைத்
தொடையாலநின்றொளிருநெடுவேலோய்செந்திநகர்ச்சுரபதிவாழ்வே. ()

சுருதிபிரமாகமத்தாந்தலைமையந்தம்புடைநூலின்சொல்லைக்
கருதவரும்பொருளைத்தங்கடைமுறைபோப்பீயாதல்காண்பரென்றுன்
புருகக்குரைபருமாமுளரிநிரைதருமாறுமுகனேமாயோன்
மருகநினதொருநிலைமையெவரளப்பர்மலரோற்குமயங்கிற்றன்றே. (உஉ)

மயங்காதபுதுமுளரிமலராறுதிருமுகமுமலர்ச்செவ்வாயுஞ்
சயங்காணுநெடுவேலுங்கிளர்க்கரமுங்கொழுமாறுதருமாறுண்டே
கயங்காதுநடாங்கூவிளையிலைபேதிருவளைப்பக்கபலாய்வானை
பயங்காவலுறசண்டிகைநந்திரைகிழியவுழுதசெந்திற்பதியினனே. (உங.)

நாணெனிகாணினந்தபொருளாகிப்பொருளிருக்குநிலையாகி
யூனுகியுயிராகியுயிர்க்குயிராயுயிர்ப்பாக்குமொருவனுகித்
தேனுகிச்சுவையாகிப்பொருடோறுங்காரணமாகின்றசிறுவாதேவர்
கோனுயசுடரிலைவேற்குமாவுனையெவ்வண்ணங்குறிக்குமாறே. (உச)

குரியார்பொற்பணிமுளரித்தண்டையந்தாளாறிரண்டுகுலத்தோளேறுக்கி
யறியார்நின்றிருநாமமினைந்துருகியழுதழுதுபிதற்றார்தோ
வெறியார்பைந்துணர்க்கடம்பநறுந்தாரோய்செந்தில்வந்தவிமலனேயுன்
பொறியாளர்கோபிரீயப்படுகுழிக்காளாதல்கண்டுபொறுக்கிலேனே. ()

பொறுத்தாலுநினதடியாரடிக்கமலமொருசிறிதுபொறுமைகூர்ந்து
கறுத்தாலுநினதடியார்க்காட்பட்டாற்குறித்திருகண்கறுத்துச்சிறி
வெறுத்தாலுநினதடிமைவேண்டாரைவேற்படைபோய்விரிநீர்க்கங்கை
செறுத்தாரமுடிபுனைந்தசிவபெருமானுவந்தளித்தசெந்தில்வாழ்வே. ()

(தொடரும்)

சு. நல்லசிவன்பிள்ளை,
உதவிபுபாத்தியாயர்,
தமிழ்ச்சங்கக்கலாசாலை, மதுரை.

# மதிப்புரை.

தமிழிலக்கணம்; (இரண்டாம்பகுதி)—இது மல்லாகம் சுன்னாகம் உதவிவித்யாதரிசி ஸ்ரீமத், பொன்னையா அவர்களால் ஆங்கிலகலாசாலைகளில் ஆறாந்தரத்திற் கற்கும் மாணவர்களுக் குபகாரமாகச் செய்யப்பட்டிருக்கிறது. இதிற் சொல்லிலக்கணத்துள், பெயர், வினை, இடை, உரி இயல்களிற் சொல்லும் இலக்கணங்களைச் சூத்திரங்களின்றி முப்பது பக்கத்துட் சுருக்கிவிளக்கியும், எழுத்திலக்கணத்துள், எழுத்தியல் பதவியல்களிற் சொல்லுமிலக்கணங்களைச் சூத்திரங்களோடு அறுபது பக்கத்தில் விரித்து விளக்கியும், ஒவ்வொருபொருளில்வரும் பற்பலவிகுதிகளுக்கும் புதிய உரைச்சூத்திரங்களியற்றியும், உதாரணங்களை அட்டவணையிலடைத்துக் காட்டியும், அப்பியாசவினைக்களமைத்தும் தெளிவுறக்காட்டியிருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. இதைப்படிப்பவர்களுக்கு நன்னூல்படிப்பதற்கு வேண்டுமளவான தமிழிலக்கணவுணர்ச்சியுண்டாகுமென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை.

ஆயினும், நம் தமிழிலக்கணநூல்களிற்றொன்றுதொட்டுப்பயின்று வரும் எழுத்துச் சொல்லிலக்கணப்பயிற்சி முறைமையை முன்பின்னாக மாற்றியும், பொருளிடங்காலஞ்சினைகுணந்தொழில் என்னு மறுவகைப் பெயர்களுள் இடப்பெயர் காலப்பெயர்களைப் பொருட்பெயருளடக்கி நால்வகைப்பெயரெனக் காட்டியுமிருக்கும் இன்னோரன்ன புதிய வேறுபாடுகளையும், பொருட்கள் என்பதுபோலும் புதியசொல்வழக்கினையும் கொண்டிருப்பது பொருத்தியதாகத் தோன்றவில்லை. இவற்றை விலக்கிப் பழையமுறையைத்தழுவி யெழுதித் தக்க பண்டிதர்களுடைய நன்மதிப் போடு பிழைதிருத்தமுஞ் செய்திருந்தாற் பெரிதும நலமாயிருக்குமென் றெண்ணுகிறேன்.

பத்திராதிபர்.

## மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1920-௵ டிசம்பர் ௴ த்திய வரவு செலவு கணக்கு.

| விவரம். | வரவு 1920 December | | | வரவு 1919 December | | |
|---|---|---|---|---|---|---|
| **I General Section:** | | | | | | |
| (1) நன்கொடை, மாதச்சந்தா வகையில் வரவு ... | 120 | ... | ... | | | |
| (2) M. R. C. C. Bank-ல் போட்டுள்ள தொகையின் பேரில் வட்டி வரவு. ... | 781 | 6 | 6 | | | |
| (3) பரீக்ஷைக் கட்டணத்தொகை வரவு ... | 1 | ... | ... | | | |
| (4) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு. | 55 | 10 | ... | | | |
| (5) Miscellaneous வரவு ... | ... | 1 | ... | | | |
| மொத்தம் ... | 958 | 1 | 6 | 20334 | 12 | ... |

| விவரம் | செலவு 1920 December | | | செலவு 1919 December | | |
|---|---|---|---|---|---|---|
| **I General Section:** | | | | | | |
| (1) Establishment:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டு ஆபீஸ்சிப்பந்திகட்குச் சம்பளம் செல்... | 136 | ... | .. | | | |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 107 | ... | ... | | | |
| (c) மாணவர்கட்குப் போஷணைக்காகச் செல் ... | 115 | 10 | 8 | | | |
| (d) Literary Section சிப்பந்திகட்குச்சம்பளம் செல் ... | 65 | ... | ... | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையிற்செல் ... | 7 | 3 | 2 | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **II Editorial Section:** | | | | | | |
| (1) 'செந்தமிழ்'ப்பத்திரிகைக்குச் சந்தாவரவு ... | 6 | 4 | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பழைய தொகுதிகள் விற்ற வகையில் வரவு ... | 17 | 1 | ... | | | |
| மொத்தம் ... | 23 | 5 | ... | 38 | 15 | ... |
| **III Press Section:** | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்ஸில் நடந்த வேலைகளுக்கு அச்சுக் கூலி வரவு ... | 273 | ... | ... | | | |
| (2) ஷை வேலைகட்காகக் காகிதக்கிரயம் வரவு ... | 180 | 7 | ... | | | |
| (3) Miscellaneous வரவு... | 11 | 8 | ... | | | |
| (b) Binding: | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீஸில் நடந்த வேலைகளுக்கு பைண்டிங் சார்ஜ் வரவு... | 48 | 13 | ... | | | |
| மொத்தம் ... | 513 | 12 | ... | 313 | 15 | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) பாண்டியன் புத்தகசாலைக்குப் புத்தகம் வாங்கிய வகையிலும், Hindu பத்திரிகைக்குச் சந்தாசெலுத்திய வகையிலும் செலவு... | 28 | ... | ... | | | |
| (4) சங்கக்கட்டட வகையராவிப்பேர்சம்பந்தமாகச் செலவு ... | 194 | 12 | 8 | | | |
| (5) தபால், தந்திவகையில் செலவு ... | 9 | 8 | 8 | | | |
| (6) பரீக்ஷை விஷயமாகச் செலவு ... | 6 | 8 | ... | | | |
| (7) Miscellaneous செலவு... | ... | 5 | ... | | | |
| மொத்தம் ... | 664 | 10 | 4 | 20644 | ... | 2 |
| **II Editorial Section:** | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பத்திரிகைசம்பந்தமாக, வாங்கிய காகிதம் அச்சுக்கூலி வகையிற் செல் ... | 35 | ... | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) தபால், தந்தி வகையிற் செல் ... | 10 | 4 | 9 | | | |
| மொத்தம் ... | 80 | 4 | 9 | 75 | 13 | 6 |
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing: | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 151 | 9 | 10 | | | |
| (2) ரிப்பேர்வகையில் செலவு | 4 | 2 | ... | | | |
| (3) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 134 | 9 | 6 | | | |
| (4) Miscellaneous செலவு. | 27 | 2 | ... | | | |
| (b) Binding: | | | ... | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 29 | 10 | 1 | | | |
| (2) Furniture வாங்கிய வகையிற் செலவு ... | ... | 10 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ ... | 1495 | 2 | 6 | 20687 | 10 | ... |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத்தொகை ... | 1531 | 7 | 8 | 1382 | 6 | 3 |
| ஆகமொத்தம் ரூ ... | 3026 | 10 | 2 | 22070 | ... | 3 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (3) Contingencies வாங்கிய வகையிற்செலவு ... | 21 | 12 | 5 | | | |
| மொத்தம் ... | 369 | 7 | 10 | 8 | 2 | ... |
| ஆக மொத்தம் செலவு ரூ ... | 1114 | 6 | 11 | 20727 | 15 | 8 |
| மாதமுடிவில் மீதி இருப்புத் தொகை ... | *1912 | 3 | 3 | 1342 | ... | 7 |
| ஆகமொத்தம் ரூ. ... | 3026 | 10 | 2 | 22070 | ... | 3 |

*By C Pass Book 500—0 0
Advance for purchase of Press Materials at Madras 1112-11—0
Cash on hand 299—8—3

*Audited and found correct,*

**V. S. RAMASWAMI,**

AUDITOR,

15—3—21.

**T. SUDARSANACHARI,**

*Manager,*

MADURA TAMIL SANGAM.

27—1—21.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்து

## 1921 ௵ ஜனவரி௴ த்திய வரவு செலவு கணக்கு.

| விவரம் | வரவு 1921 January | | | வரவு 1920 January | | |
|---|---|---|---|---|---|---|
| **I GENERAL SECTION:** | | | | | | |
| (1) நன்கொடை, மாதச்சந்தா வகையில் வரவு ... | 250 | ... | ... | | | |
| (2) M. U. C. S. & Stores-ல் போட்டுள்ள தொகையின் பேரில் வட்டி வரவு ... | 2 | ... | 2 | | | |
| (3) சங்கப்பரீக்ஷைக் கட்டணத் தொகை வரவு ... | 131 | 4 | ... | | | |
| (4) சங்கப்பதிப்புப் புத்தகங்கள் விற்றவகையில் வரவு ... | 66 | 1 | 9 | | | |
| (5) Miscellaneous வரவு ... | ... | 6 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 449 | 11 | 11 | 676 | 12 | 9 |

| விவரம் | செலவு 1921 January | | | செலவு 1920 January | | |
|---|---|---|---|---|---|---|
| **I GENERAL SECTION:** | | | | | | |
| (1) ESTABLISHMENT:— | | | | | | |
| (a) மானேஜ்மெண்டாபீஸ் சிப்பந்திகட்குச் சம்பளம் செல் | 136 | ... | ... | | | |
| (b) கலாசாலை உபாத்தியாயர்கட்குச் சம்பளம் செல் ... | 107 | ... | ... | | | |
| (c) Literary Section சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 65 | ... | ... | | | |
| (2) Stationery, contingencies வாங்கியவகையில் செல் ... | 7 | 8 | 7 | | | |
| (3) Furniture வாங்கிய வகையிற் செல் ... | 2 | 8 | ... | | | |
| (4) சங்ககட்டட வகையராரிப்பேர் சம்பந்தமாகச் செலவு ... | 222 | ... | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **II Editorial Section:** | | | | | | |
| (1) சங்கத்தின் அங்கத்தினர்களி— மிருந்து சந்தா வரவு ... | 6 | ... | ... | | | |
| (2) 'செந்தமிழ்'ப் பத்திரிகைக் குச் சந்தா வரவு ... | 16 | ... | ... | | | |
| (3) விளம்பர சார்ஜ் வரவு ... | 1 | 8 | ... | | | |
| (4) 'செந்தமிழ்'ப் பழைய தொகு திகள் விற்ற வகையில் வரவு | 4 | 1 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 27 | 9 | ... | 130 | 7 | .. |
| **III Press Section:** | | | | | | |
| (a) Printing | | | | | | |
| (1) சங்கம் பிரஸ்ஸில்நடந்த வேலைகளுக்கு அச்சுக் கூலி வரவு ... | 144 | 4 | ... | | | |
| (2) ஷெ வேலைகட்காகக் காகி தக் கிரயம் வரவு ... | 1 | 8 | ... | | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| (5) தபால், தந்திவகையில் செல் ... | 8 | 3 | 9 | | | |
| (6) சங்க சில்லறைவேலைகள் சம்பந்தமாக அச்சுக்கூலி பைண்டிங்கூலிவகையில் செலவு ... | 24 | 3 | ... | | | |
| (7) Miscellaneous செலவு. | ... | 13 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 573 | 4 | 4 | 515 | 12 | 4 |
| **II Editorial Section:** | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 35 | ... | ... | | | |
| (2) செந்தமிழ்ப் பத்திரிகை சம்பந்தமாக வாங்கிய காகிதம் அச்சுக்கூலிவகை யில் செலவு ... | 90 | 14 | ... | | | |
| (3) தபால், தந்தி வகையில் செலவு ... | 20 | 5 | 3 | | | |
| மொத்தம் ரூ ... | 146 | 3 | 3 | 136 | 12 | ... |

| | Rs. | As. | Ps. | Rs. | As. | Ps. |
|---|---|---|---|---|---|---|
| (b) Binding | | | | | | |
| (1) சங்கம் பைண்டிங் ஆபீஸில் நடந்த வேலைகளுக்கு, பைண்டிங்-சார்ஜ் வரவு ... | 59 | 14 | ... | | | |
| மொத்தம் ரூ ... | 205 | 10 | ... | 285 | ... | ... |

| | Rs. | As. | Ps. | Rs. | As. | Ps. |
|---|---|---|---|---|---|---|
| III PRESS SECTION: | | | | | | |
| (a) Printing | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 128 | 10 | 11 | | | |
| (2) அச்சாபீசிற்கு டைப்ஸ் வகையரா வாங்கியது ... | 171 | 2 | ... | | | |
| (3) ரிப்பேர்வகையிற்செலவு. | 7 | 12 | ... | | | |
| (4 Furniture வாங்கிய வகையில் செலவு ... | 1 | 3 | ... | | | |
| (5) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 39 | 15 | 4 | | | |
| (6) Miscellaneous செலவு.. | 23 | 8 | ... | | | |
| (b) Binding | | | | | | |
| (1) சிப்பந்திகட்குச் சம்பளம் செல் ... | 27 | 8 | 3 | | | |
| (2) Contingencies வாங்கிய வகையில் செலவு ... | 65 | 2 | 4 | | | |
| மொத்தம் ரூ | 464 | 13 | 10 | ... | ... | ... |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் வரவு ரூ. ... | 682 | 14 | 11 | 1092 | 3 | 9 |
| மாத ஆரம்பத்திலிருந்த கையிருப்புத் தொகை ரூ. ... | 1912 | 3 | 3 | 1342 | ... | 7 |
| ஆகமொத்தம் ரூ. ... | 2595 | 2 | 2 | 2434 | 4 | 4 |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஆகமொத்தம் செலவு ரூ. | 1184 | 5 | 5 | 652 | 8 | 4 |
| மாத முடிவில் மிதியிருப்புத் தொகை ... | *1410 | 12 | 9 | 1781 | 12 | ... |
| ஆகமொத்தம் ரூ. ... | 2595 | 2 | 2 | 2434 | 4 | 4 |

*By C. Pass Book 6-0-0
Advance for purchase of Press Materials at Madras 1112-11—0
Cash on hand 292-1-9

*Audited and found correct.*

**V. S. RAMASWAMI,**

AUDITOR.

15—3—21.

**LAKSHMINARAYANAN,**

*Ag. Manager.*

MADURA T[illegible]

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ... | 146 | 3 | 3 | 136 | 12 | ... |